35-

கோவிலூர் ஆதீனம் திருக்களர் ஆண்டவர் வரலாறு என்னும் நூலை வெளியிட, சேக்கிழார் அடிப்பொடி தமிழ் அறிஞர் டி.என். இராமச்சந்திரன் பெற்றுக் கொள்ளும் காட்சி.

# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

மன்மத – வைகாசி – 2015 – மே

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

மன்மத - வைகாசி - 2015 - மே இதழ் - [illegible]

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

மணிவண்ணத் திருமேனி மாமாயன் பின்பிறந்த
மங்கைஅப ரஞ்சிஎழில் மயிலின் சாயல்
மான்போல மருண்டவிழி மகர்த்த கூந்தல்
மணிபணிபொன் அணியணிந்த மைசேர் கண்ணாள்

அணியரவம் விளையாடும் அம்பலவன் நம்பெருமான்
அருகிருந்து சிவனழுகை அனுப வித்தே
அருள்செய்யும் திருநெல்லை அம்பு யத்தாள்
அரவிந்தம் அனையாளை ஆர்த்த சான்றோர்




பணியவரம் தந்துதவும் பதுமமுகம் அனையவளைப்
பவளவெற்பில் படர்ந்தகொடிப் பச்சை யாளைப்
பால்வண்ண வெண்ணீறு படர்ந்த மேனிப்
பண்ணவனாம் கொற்றவாள் ஈசன் தம்மைப்

பிணியகற்றும் பிஞ்ஞகனை மணங்கொண்ட பெரியவளைப்
பெற்றதாய் வன்னிவனம் பேணு வாளைப்
பேரழகு படைத்தவளைப் பேணி வாழ்வார்
பெருமையினை நாம் என்றும் போற்றலாமே !

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

மே மாதம் நம் கைவல்ய நவநீதம் சம்பந்தப்பட்ட இரண்டு நிகழ்ச்சிகளிலே பங்குகொள்ள நேரிட்டது. மே 9,10,11 ஆகிய மூன்று தினங்கள் சென்னை செங்குன்றம் அருகில் உள்ள பாடியநல்லூரில் தாண்டவராயர் கைவல்ய நவநீதப் பெருமன்றம் என்ற பெயரிலே 3 நாள் மிகச் சிறப்பாக கைவல்ய நவநீத மாநாடு நடைபெற்றது. மே மாதம் 22ஆம் தேதி நன்னிலத்தில் (திருவாரூர் மாயவரம் சாலைக்கு இடையில் உள்ளது) அருள் பாலித்து வரும் ஸ்ரீமத் நாராயண குரு, ஸ்ரீமத் தாண்டவனேஸ்வர சுவாமிகளின் ஜீவ சமாதி கோவிலிலே கைவல்ய நவநீதம் நூல் திரு.சு. வெங்கடேசன் அவர்களின் பொழிப்புரையுடன் வெளியிடப்பெற்றது.

இந்த இரண்டு விழாக்களிலும் நாம் கலந்து கொண்டோம். கைவல்ய நவநீத மாநாட்டில் நிறைவு நாளன்று தலைமையேற்று, திருக்களர் ஆண்டவர் வரலாறு என்ற நூலினை வெளியிட்டு ஆசியுரை வழங்கினோம். நாம் வெளியிட்ட நூலினைப் பெற்றுக்கொண்டு தஞ்சாவூர் வழக்கறிஞர் சேக்கிழார் அடிப்பொடி டி.என். இராமச்சந்திரன் அவர்களும் வைடிசெட்டிபாளையம் (துளாவூர் அருகே) முத்தமிழ்ப் பண்ணைப் பதிப்பாளர் திரு.அரங்கநாதன் அவர்களும் வாழ்த்துரை வழங்கினார்கள். அந்த விழாவிலே நம்முடைய வேதாந்த மாணவர்கள் அனைவரும் கலந்து கொண்டார்கள். நம்முடைய வேதாந்த நூல்களையும் விற்பனைக்குக் கடை விரித்திருந்தோம்.

அந்த விழாவிலே நம் மனத்திற்கு நிறைவாக அனைத்துச் செயல்பாடும் அக்கறையோடும், முழு ஈடுபாட்டோடும் நிறைவேற்றப் பட்டன. அது கண்டு நம் மாணாக்கர் மிக்க மகிழ்ச்சி அடைந்தனர். ஏறக்குறைய 600 அன்பர்கள் மூன்று நாட்களும் தங்கி மாநாட்டில் கலந்து கொண்டது மிக்க வியப்பிற்குரியது. அதிலும் அவர்கள் அனைவருக்கும் தங்கும் இடம், உணவு அனைத்தும் குறைவற அளித்துச் சிறப்பித்தார்கள். இந்த மாநாட்டை மனதில் உருவாக்கி

திட்டமிட்டுச் செயல்படுத்தியவர்கள் என்று பார்த்தால் விரல்விட்டு எண்ணக்கூடியவர்களே. அவர்களுடைய இடையறாத உழைப்பும், ஆர்வமும் ஈடுபாடும் மிகவும் பாராட்டுக்குரியனவாகும்.

அதில் மேலும் சிறப்பு என்னவென்றால் இந்த 600 பேரிலே ஏறக்குறைய கால்பங்கு நவநீத மாணவர்கள்; 40க்கும் கீழாக இளைஞர்களாக இருப்பது. அந்த இளைஞர்களுடைய ஈடுபாடும், பண்பும், பெரியோர்களைப் போற்றுகின்ற குணமும் மிக வியப்பிற்குரியனவாக இருந்தன. அந்த வேதாந்த மாணவர்கள் பெரும்பாலும் பொருளாதாரத்திலே நடுத்தரமாக இருப்பார்கள். பெரும் பாலானோர் விவசாயம், கட்டுமானம் போன்ற தொழில்களிலே ஈடுபட்டவர்களாக இருப்பவர்கள். இப்படிப்பட்ட ஆர்வமுடைய இளைஞர்களைச் சேர்ப்பது என்பது மிகுந்த பாராட்டுக்குரியது. அவர்களுடைய தெளிவான முறையிலே வேதாந்தப் பாடங்கள் மற்றும் நன்னெறி நூல்கள் பற்றிய அறிவினை வளர்ப்பதற்கு நம்மால் இயன்ற உதவிகளை - புத்தகங்களைப் பதிப்பிப்பது, வேதாந்தப் பாடசாலைகளை ஆதரிப்பது போன்ற செயல்களைச் செய்ய வேண்டும் என்ற விருப்பம் மேலோங்கி நிற்கிறது.

இந்த நோக்கம் தொடர்ந்திட குறுகிய காலப் பயிற்சி முகாம்கள் கோவிலூரிலே நடத்தத் திட்டமிட்டு வருகிறோம். வரும் ஆகஸ்ட் மாதம் கோவிலூரில் மரபு வழி வேதாந்தத்தின் முதல் நூலாகிய நாநா ஜீவவாதக் கட்டளை எட்டு நாட்கள் நடத்துவதற்குத் திட்டமிட்டு வருகிறோம்.

இது போன்ற உள்ளத்திற்கு உவப்பளிக்கக்கூடிய நற்காரியங்களை நம்முடைய பகுதி இளைஞர்களும் - பொருளாதார முன்னேற்றத்தை மட்டுமே கருதாமல் ஆன்ம நேயத்தையும் வளர்த்துக் கொள்ள முயல வேண்டும் என்று நாம் விரும்புகிறோம். அந்த முயற்சியைத் தொடங்குவோமாக.

*ஆசிர்வாதங்கள்*

## தவத்திரு குமார தேவர் அருளிய

# மகாராஜா துறவு (தொடர்ச்சி)

93. முனமே அனைத்தும் முடித்து முழுதும் உணர்ந்தோர் இல்லின்
இனமே சென்று நின்றும் ஏகம் நீங்கார் என்னில்
தினமே அகமாய் நிற்போர் செகத்தின் இயல்பை உணரார்
கனமாம் யாழ்ப்பா ணத்தின் கப்பல் ஓட்டம் போல.

முற்பிறப்பிலேயே தத்துவ ஞான சாதனங்கள் எல்லாவற்றையும் செய்து முடித்து, பரப்பிரம்மமே தமது வடிவாய் உணர்ந்த பெரியோர், இப்பிறப்பில் தமக்கு உறவாய் உள்ளவரோடு கூடி இல்லற தர்மத்தைக் கடைப்பிடித்தாலும் அனைத்தும் பிரம்மத்தின் வடிவம் என்னும் ஒரே எண்ணத்தில் இருந்து நீங்க மாட்டார்கள். இவ்வாறு கூறும் போது, தானே அதுவென்று உணர்ந்து நானே பிரம்மம் என்னும் பாவனையில் இருப்பவர் உலக நோக்கம் உடையவர் ஆவாரோ? தூத்துக்குடியில் இருந்து கப்பலில் ஏறி யாழ்ப்பாணம் செல்லும் பிரயாணிகளுக்குத் தூத்துக்குடி சிறிது சிறிதாக மறைந்து யாழ்ப்பாணத்தின் கரை தென்படுவது போல உலக உணர்வை நீக்கியவனுக்கு,தானே பிரம்மத்தின் வடிவம் என்பது புலப்படும்.

94. ஒருத்தன்ஓர்ஊர் உளனை ஒருவேந்து ஆக்கின் முன்னம்
இருக்கும் இடத்தை நீக்கி ஏக ராச தானி
இருக்கும் அன்றி முன்கண் இருக்கு மோதான் சொல்லாய்
திருக்கு ஞானம் உடையோர் செகத்தை மெய்என்று உழலார்.

பெரிய வேந்தன் ஒருவன், ஓர் ஊரில் வசிப்பவனை அவன் மேல் உள்ள அன்பினால் ஒரு நாட்டிற்கு அரசன் ஆக்கினான் என்றால், அவன் முன்னே தான் இருந்த ஊரை நீக்கி விட்டு, அரசுக்கு உரிய தலைநகரில் இருப்பான். அதனை விடுத்து வேறு ஊரில் இருப்பானோ? இவ்வாறுதான் இல்லறத்தை விட்டுத் துறவறத்தில் இருப்பவர் மீண்டும் இல்லறத்தை மேற்கொள்வாரோ? ஞானிகள் இந்த உலகத்தை மெய் எனக் கருதி உழலமாட்டார்கள்.

95. மனையில் நின்றாலும் பொருள் உயிர்ச் சார்வின்
வருத்தனம் கெடுதலின் மகிழ்ச்சி
இனிமையில் வாட்டம் விடயஇன் பம்அதனில்
எள்துணை ஆயினும் ஆசை

பிலனஅதில் தமது பிரவிர்த்தி தானும்
பேசும்இந் நான்கும்இல் எனினும்
தலைஉணர் வதற்குச் சாதகஞ் செய்யுங்கால்
தள்ளிஇல் நிற்றலே தகுதி.

இல்லறம் நடத்துபவனுக்கு மனைவி மக்களால் இன்பம் உண்டு. செல்வத்தினால் இன்பம் உண்டு. இவை இரண்டும் நீங்காமல் இருப்பதனாலேயே மகிழ்ச்சி உண்டாகும். இன்பம் தரும் பொருள் கிடைக்காவிட்டால் வாட்டம் உண்டாகும். போகங்களில் ஆசையும் அவற்றைப் பெறுவதற்குரிய முயற்சியும் இல்லறத்தானுக்கு எப்போதும் இருக்கும். இவை நான்கும் இல்லாவிட்டாலும் (மகிழ்ச்சி, வாட்டம், ஆசை, முயற்சி) ஆத்மாவை உணர்வதற்காகச் சாதனையில் ஈடுபடும் பொழுது இல்லறத்தைத் துறந்து விடுதலே ஒழுக்கமாகும்.

96. தீதுஉறு மனைஇன் பிலைஇகழ்ந்து அந்தச்
செம்பொருள் இன்பமே வேண்டிச்
சாதகம் அதனில் தொடங்குகால் விடயம்
தடையதுஆம் சாத்திய மான
போதினில் அவையும் தோன்றிடாது அந்தப்
பொருவில்ஆ னந்தம்மேல் இடவே
ஆதலில் துறவுஇல் ஞானம்அஞ் ஞானம்
ஆகும்என்று அறைகுவர் பெரியோர்.

தீமை பொருந்திய இல்லற வாழ்வின் இன்பத்தை வெறுத்து, உண்மை இன்பமாகிய பேரின்பத்தை வேண்டி, அதற்குரிய சாதனங்களில் ஈடுபடத் தொடங்கும் காலத்தில் உலக விஷயங்களில் ஈடுபாடு தடையாகும். ஒப்பில்லாத அந்தப் பேரின்பம் மேலிட, உலக விஷயங்கள் இன்பமாகத் தோன்றிடாது. ஆகையால் துறவில்லாது இல்லறத்திலிருந்துகொண்டே அடையும் ஞானமானது அஞ்ஞானமே என்று பெரியோர் சொல்லுவர்.

**துறவினால்தான் ஞானம் சிறந்து விளங்கும்**
**இல்லறத்தினால் விளங்காது எனல்**

97. இல்லறம் அதனில் உறைந்துளோர் இடத்தில்
இருப்பினும் ஞானம்கீழ் இரும்பின்
புல்லிய மாரத் தினம்என விளங்கும்
போக்கிஇல் லினைத்துறவு என்னும்

நல்அறம் அடைந்தோர் இடத்துஉறை ஞானம்
நல்தங்க மிலைசரத்தி னம்போல்
எல்லையில் ஒளியாய் விளங்கிடும் ஆயின்
இல்சிறப் பன்றுஞா னிகட்கே.

இல்லறத்தாரிடம் தத்துவ ஞானம் இருப்பினும், தாழ்ந்த இரும்பு ஆபரணத்தின்கண் பதிக்கப் பட்ட சிறந்த இரத்தினத்தைப்போல,ஒளியும் சிறப்பும் இழந்து தோன்றும். இல்லறத்தை விடுத்துத் துறவு என்னும் நல்லறத்தை அடைந்தோரிடம் தங்குகின்ற தத்துவ ஞானம், நல்ல பொன் ஆபரணத்தில் வைத்த இரத்தினம் போல், அளவற்ற ஒளி உடையதாய்த் தோன்றும். ஆதலால் ஞானிகளுக்கு இல்லற வாழ்வு சிறப்புத் தர மாட்டது.

## துறவறமே சிறப்புடையது

98. முனம் அனைவர்களும் உறைவது இல்லம்
முத்தியை உணர்ந்த அறிஞர்களும்
பினம் அதில் நின்ற படியினால் சங்கை
பேசுவர் துறவுடையோரை
இனம் அதை விடுத்து இல்லறம் அதுவே
தலைஎன இயம்புவது உண்டோ
மனமதில் இதனை யூகி நீ அமைச்ச
மகிமை அன்று இல்லம் ஞானிகட்கே.

எல்லோரும் மேற்கொண்டிருப்பது இல்லறம். இல்லறத்தில் இருந்துகொண்டே சாதனை செய்து முத்தியை உணர்ந்து விட்ட ஞானிகளும் உண்டு. சீவன் முத்தி நிலையை அடைந்த பின்னரும் இல்லறத்தில் இருக்கும் மனத்துறவு உடைய ஞானிகளைக் கூட மக்கள் சந்தேகித்துப் பேசுவார்கள். துறவறத்தைவிட இல்லறம் சிறந்தது என்று கூறுமுடியுமா? அமைச்சரே! இல்லறம் ஞானிகளுக்குச் சிறப்பைத் தராது. இதைச் சிந்திப்பீராக.

## ஞானிகளின் இயற்கை கூறல்

99. ஆடிய சகலம் அடங்கும் கேவலமும்
அகற்றியே ஒளிப்படைகொண்டும்
மூடிய இருளை முழுதையும் வீசி
முடிவில்வீடு அதனையே உணர்ந்தோர்

நீடிய ஞால மிசையினில் பாலன்
நிசம்மருள் உடையன்பேய் பிடித்தோன்
கூடிய குணத்தின் ஊரில்போய்க் குடியின்
கூலிஆளினின் இயல்பு அடைவார்.

நடைடற்ற எல்லா அவத்தைகளும்,*அடங்கிப் பலவிதமான சாதனைகளால் மனத்தை அடக்கித் தத்துவஞானம் என்னும் ஒளி மிகுந்த வாளினால் கவிந்திருக்கும் அஞ்ஞானம் என்ற இருளைப்போக்கி முடிவாகச் சீவன்முத்தி என்ற நிலையை அடைந்தவர்கள் எப்படி இருப்பார்கள்? ஒன்றுமே தெரியாத சிறு குழந்தை போலவும், உண்மையாகவே பைத்தியம் பிடித்தவன் போலவும், பேய் பிடித்துத் திரிபவன் போலவும் காணப்படுவார்கள். ஊரிலுள்ளோர் ஏவும் எந்தப் பணியானாலும் முகம் சுளிக்காமல் கூலிக்கு வேலை செய்பவனைப் போலச் செய்வார்கள்

*அவத்தைகள் - விழிப்புநிலை, கனவு நிலை, ஆழ்ந்த உறக்கம்

## ஞானிகள் இல்லறத்தை விரும்புவதில்லை

100. வினைகள் ஓர்இரண்டும் சமமதாய் ஞானம்
மேலிடு காலையில் இந்த
மனைஇன்பம் கான்ற சோற்றிற் கண்டுஉவர்த்து
மாற்றியே கைவிட வருமேல்
தனைஉள படியே அனுபவம் அதனில்
தான்உணர்ந்து ஆனந்தம் அடைந்தோர்
பினையும்அவ் விடயம் பூண்பர்கள் எனவே
பேசுதல் வழங்குமோ சொல்லாய்.

நல்வினை தீவினையினால் வரும் பயன்களைச் சமபாவனையுடன் நோக்குபவர்களுக்கு ஞானம் மேலிடும். அந்தச் சமயத்தில் இல்லற இன்பம் கக்கின உணவு போல் தோன்றும். இல்லறத்தைக் கைவிட்டவர்கள் மீண்டும் உலக விஷயங்களில் ஈடுபடுவார்களா? (மாட்டார்கள்) தன்னை உணர்ந்து பேரானந்த நிலையை அடைந்தோர் மீண்டும் இல்லறத்தில் ஈடுபாடு கொள்வார்கள் என்று சொல்வது சரியாகுமா? அமைச்சரே! சொல்லுங்கள்!

*(தொடரும்...)*

## ஆண்டவரின் சீடர்களுடைய அற்புதக் குணங்கள்

(தொடர்ச்சி)

**(சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்)**

சென்ற இதழில் பள்ளத்தூர் முத்து வீரப்ப ஐயா அவர்களுடைய நேர்மையையும், சொற்பொழுது புரியாத பண்பையும் பார்த்தோம்.

முத்து வீரப்ப ஐயா அவர்கள் மடாலயத்தின் ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களையும், பல இலட்சம் (19ம் நூற்றாண்டில்) பெறக்கூடிய மடாலய அசையாச் சொத்துக்களையும் காத்து உரிய முறையிலே மடாலயப் பொறுப்பாளர்களிடம் ஒப்பித்த வரலாற்றைக் கடந்த இதழிலே நாம் சிந்தித்தோம்.

அடுத்து அருள் பெறும் குணம் பெற்ற ஆண்டவர் சீடர் நேமத்தான்பட்டி பழனியப்ப ஐயா அவர்களைப் பற்றிச் சில செய்திகளை நாம் அறிகின்றோம். அவற்றைப் பற்றிச் சிந்திப்போம்.

பழனியப்ப ஐயா நேமத்தான்பட்டி வைரவன் கோவில் மரபிலே நிறைந்த செல்வமும் செல்வாக்கும் கொண்ட குடும்பத்திலே தோன்றியவராயினும், கோவிலூர் ஆண்டவரிடம் பாடம் கேட்ட சிறப்பாலே மனத்தளவிலே துறவியாக வாழ்ந்து, கோவிலூர் நிர்வாகத்தை ஆண்டவர் சித்தி அடைந்த பின் முழுமையாகக் கவனித்து வந்திருக்கிறார்கள். துறவாண்டவர் முக்தி பெற்ற பின்னர் (1849) கருணாநிதி சுவாமிகள் 3ஆவது பட்டமாகப் பதவியேற்றுக் கொண்டிருந்தாலும், நிர்வாகம் முழுமையாகப் பழனியப்ப ஐயாவாலே நடத்தப்பட்டு வந்துள்ளது. கருணாநிதி சுவாமிகளுடைய இளவயது காரணமாக, ஏறக்குறைய 12 ஆண்டுகள் மடாதிபதியினுடைய அனைத்துப் பொறுப்புக்களையும் பழனியப்ப அய்யாவே நிர்வகித்து வந்திருக்கிறார்கள். ஸ்ரீமத் காசிகானந்த சுவாமிகள், பழனியப்ப ஐயா 12 ஆண்டுகள் முழு நிர்வாகம் நடத்தி வந்தார்கள். வேதாந்த பாடமும் கருணாநிதி சுவாமிகளுக்கு உதவியாக நடத்தி வந்தார்கள் என்று தன்னுடைய நூலிலே குறிப்பிடுகின்றார். பழனியப்ப ஐயா வாழ்ந்த காலத்தில் கோவில் திருப்பணிகளையும், மடாலயத் திருப்பணிகள்யும்

செம்மையாகச் செய்து வந்திருக்கின்றார்கள். இவர்கள் காலத்தில்தான் திருக்குளம் சீரமைக்கப்பட்டு மைய மண்டபம் கட்டப்பட்டது. மடாலயத்திலே உணவுக்கூடம், மண்டபம், ஆண்டவர் ஜீவ சமாதிக்கோவில் போன்றவை ஏற்படுத்தப்பட்டன. 12 ஆண்டுகள் கருணாநிதி சுவாமிகள் பழனியப்ப ஐயா முக்தி பெற்ற பின்னரே நிர்வாகத்தை ஒப்புக் கொண்டார்கள்.

1861ஆம் ஆண்டின் ஆடி மாதம் மகம் நட்சத்திரத்தில் ஆடிப்பூரத் திருவிழா அன்று பழனியப்ப ஐயா கோவிலூரில் சித்தி அடைந்திருக்கிறார்கள். அவர்களுடைய சமாதி முத்து வீரப்ப ஐயா சமாதிக்கு அடுத்தபடியாக நிர்மாணிக்கப்பட்டிருந்தது. கருணாநிதி சுவாமிகள் 26 ஆண்டுகள் முழுமையாக அருளாட்சி நடத்திய போதிலும் முதல் 12 ஆண்டுகள் முழுமையாக அனைத்துப் பொறுப்புக்களையும பழனியப்ப ஐயா செம்மையாக நடத்தி வந்திருக்கிறார்கள். இன்றும் அவருடைய வாரிசுதாரர்கள் மாதா மாதம் மகம் நட்சத்திரத்தன்று மிகுந்த சிரத்தையோடு அவர் சமாதிக்கு அபிசேக ஆராதனைக்ள் செய்து வருகிறார்கள். மேலே குறிப்பிட்ட நல்லாஞ்செட்டி முத்து வீரப்ப ஐயா, குட்டைய சுவாமி, பழனியப்ப ஐயா அனைவரும் கோவிலூர் வரலாற்றுடன் இணைந்து விட்டவர்கள் என்னும் சிறப்புக்குரியவர்கள். நம்முடைய மரியாதைக்கும் வணக்கத்திற்கும் உரியவர்கள்.

*(தொடரும்..)*

## மடாலய நிகழ்வுகள்

20.4.2015 அன்று கோட்டையூர் அழகப்ப ஐயா குருபூசையும் 21.4.2015 அன்று மகா வெங்கடாசலம் ஐயா குருபூசையும் 14.5.2015 அன்று பூஜை பழனியப்ப ஐயா குருபூசையும் சிறப்பாக நடைபெற்றன.

25.4.2015 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் பேராசிரியர் ஆய்வு மாமணி முனைவர். மு. பழனி இராகுலதாசன் திருநாளைப் போவார் பற்றிச் சொற்பொழிவாற்றினார்.

## ஞான வாசிட்டக் கதைகளும் தத்துவமும் (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

### III/08/11 : சித்தன் (சாம்பரிகன், இலவணன்) கதை.

(முற்குறிப்பு : இக்கதையின் தலைமகன், இலவணன் எனும் அரசனாவான். (வெவ்வேறு நூல்களில், இதே கதை, சாம்பரிகன் கதை, இலவணன் கதை எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது.) இந்திரனால் ஏவப்பட்ட ஒரு தூதுவன், சம்பரன். இவனே சித்தனென்றும், சாம்பரிகன் என்றும் சொல்லப்படுபவன். இக்கதை இப்பகுதியோடு முடிவுறாது, அடுத்த பகுதியிலும் (III/09/12) தொடர்கிறது. அவ்வாறு தொடரும் சிறு பகுதி மட்டும், இங்கு சேர்க்கப்பட்டுள்ளது. இது ஒரு கண்கட்டி விளையாட்டுக் (இந்திர ஜால) கதையாகும். இதன் மூலம் நம் வாசனை (பழைய மனப் பதிவுகள்), அவித்தை மற்றும் மாயை பற்றிய உண்மை வலியுறுத்தப்படுகிறது.)

கதைப் பகுதி : உத்தர பாண்டவ நாட்டை ஆண்ட மன்னவன், இலவணன். அவன், அரிச்சந்திர குலத்தவன். ஒருமுறை, மக்களும், அமைச்சர்களும் சூழ, அம்மன்னன், அரசவையில் வீற்றிருந்த போது, அங்கு சாம்பரிகன் என்னும் சித்தன் வந்தான். "வேந்தே, இந்த விசித்திரம் காண்க", எனக் கூறி, தன் கையிலிருந்த மயில் தோகையைச் சுழற்றினான். அப்போது அங்கு, சயிந்தவ நாட்டு அரசனால் அனுப்பப்பட்ட ஒரு நல்ல குதிரையோடு மற்றொரு தூதுவனும் வந்து சேர்ந்தான். "எமது அரசர், தங்களுக்கெனப் பரிசளித்த குதிரை இது", எனவும் கூறினான். சித்தனும், "இதற்கு இணையான குதிரை வேறெதுவுமே இல்லை. ஆதலால், மன்னவனே, நீ இக்குதிரை மீது ஏறி அமர்வாயாக", என்றான்.

குதிரையை நோக்கியவாறே, ஆடாது அசையாது, சித்திரம்போல, நான்கு நாழிகை காலம் வரை (96 நிமிடம் எனலாம்) இலவணன், அவனது இருக்கையிலேயே அமர்ந்திருந்தான். மிகுந்த வியப்போடும், ஐயத்தோடும் அவையோர்கள், இலவணனை நோக்கியவாறு இருந்தனர். தன் இருக்கை விட்டு, முன் நோக்கி

விழப்போன இலவணனை அருகிலிருந்தோர் தாங்கிப் பிடித்தனர். அப்போது, இலவணன் அரசவையின் நிகழ் நிலையடைந்தான். "யாது நேர்ந்தது", என அமைச்சர் வினவினார். அதற்கு மறுமொழியாக, இலவணன் கூறியன:

சித்தன், மயில் தோகையைச் சுழற்றியதும் நான் அக்குதிரையைப் பார்த்தேன். குதிரை மீது ஏறி வேட்டைக்குச் சென்றேன். நெடுந்தூரம் சென்றபின் ஓர் பாலைவனம் அடைந்தேன். நானும் குதிரையும் மிகவும் களைத்துப் போயிருந்தோம். நான் அயர்வுற்றிருந்த போது குதிரை அகன்றது. உணவு இன்றி, குளிரிலும் இருட்டிலும் அல்லலுற்று மயங்கினேன். நான் ஒவ்வொரு நாளும் செய்யவேண்டிய நியமங்களை விட்டேன்.

ஆளரவமே இல்லாத அங்கு, நான் பசியால் வாடியபோது,

**"கருகியநிறமும் கருநிறத்துகிலும் கைத்தலத்து அன்னமுமாகி**
**அருகுவந்துறலும் பசிப்பிணிஆற்றா தஅவளைநான்**
**அன்னமேஅன்னம்**
**தருதிஎன்றுஇரந்தேன் பசியினால்எவர்க்கும் தாழ்வுவந்துறும்**
**எனல்கண்டேன்**
**வருதவம்செயாதோர் விரும்பியபொருட்போல் மற்றவள்அளித்**
**திலள்அன்னம்"**

ஆதலால் அவள்பின் அலைந்து உணவு வேண்டியபோது, அவள்,

**"மாலையிட்டுஎங்கள் சேரியில்பிதாமுன் வந்துஎனைப்**
**புணர்தியேல்இந்த**
**வேலையில் அளிப்பேன் என்றனும்இயைந்தேன் விருப்பொடும்**
**அளித்தனள் அன்னம்"**

அவள் என்னை இழுத்துச் சென்றாள். அது எனக்கு நரகத்திற்கு இழுபடுவது போல இருந்தது. அவள் தந்தை முன் சென்றோம். அவளும், "நண்புறும் இவனை என் நாயகனாக நல்குக" என வேண்ட,

"கண்புகத்தோன்றும் காலதூதரைப்போல் கருநிறத்தவன் கொடுபோகி
உண்புலால்வீசுஞ் சேரியிலடைந்தான் ஒருப்படும்மணம் செய்வான்உன்னி"

தூய்மை சிறிதுமற்ற அங்கு கடிமணம் தொடங்கியது.

"மலினஊன்துன்னும் சிறுகணால்நோக்கி மருகன்நல்ல வனெனமகிழ்ந்தாள்
கலியினும்கருத்த கூன்கிழமாமி கடையர்மற்று யாவரும்கூடி
ஒலிபடுபறைகள் முழக்கினர்மதுவும் ஊன்களும் சமைத்தனர் அவளை
நலிதருபாவம் யாதனாசரீரம் நல்குமாறுஎன அவன்அளித்தான்"

அவளோடு வாழத் தொடங்கினேன். எட்டு மாதங்கள் கழிந்தபின் ஒரு பெண் குழந்தையும், மூன்று ஆண்டுகளில் ஒரு ஆண் குழந்தையும், பின்னர் ஓர் மகவும் பிறந்தன. நீண்ட நாட்கள் அவளோடு வாழ்ந்தேன். உடல் நலக்கேடு உண்டாகி வருந்தினேன். அப்போது மழையின்றிப் பஞ்சம் வந்தது. பலர் இறந்து போயினர். சிலர், ஊர்விட்டு ஓடிப் பிழைத்தனர். நான் என் மனைவி குழந்தைகளுடன் அந்நாடு விட்டு ஓடினேன். ஒரு பனைமர நிழலில் நாங்கள் இளைப்பாறுகையில், பசி தாங்காத என் மகன், ஊனும் உதிரமும் வேண்டி அழுதான். அவனது பசிக்கு உதவ இயலாது கட்டைபோலிருந்தேன். அவன் அழுகையை நிறுத்தவில்லைட தீயில் விழுந்து உயிர்மாய்ப்போம் என நினைத்துத் தீ மூட்டினேன். அதில் விழப்போன போது,

"தாங்கினர் பலரும் சயசய என்னத் தாக்குறு பல்லியம் முழக்க
வீங்குணர்வு உற்றேன் நீசன்நன்றாகிலவணனா மன்னவனானேன்"

(சயசய = போற்றுதல், பல்லியம் = தாளமும் பாடலும், நீசன் = தாழ்நிலையோன்) என, இலவணன் கூறி முடித்தான்.

அதுவரை அரசவையிலிருந்த சித்தன், அப்போது மறைந்து போனான். இதனைக் கண்ணுற்ற அவையோரும், "இவன் வித்தைக்

காரன் அல்லன். மாயையின் ஆற்றலையும், நம் மன விரிவையும் உணர்த்துவான் வேண்டி, இங்கு வந்த தெய்வ மாயை ஆகும்" என்றனர்.

மேற்கூறியவாறு வசிட்டர், இராகவருக்குக் கூறினார்.

('சித்தன் கதை' என்பது இதுவரை மட்டுமே. ஆனால் இலவண மன்னன் பற்றிய கதையும், தத்துவமும், இதற்கு அடுத்ததான 'உற்பத்திப் பிரகரண இதோபதேசம்', (III/09/12) பாடல் எண்கள் 31-35 & 54-64ல் தொடர்கிறது. இவை மட்டும் கீழே சேர்க்கப் பட்டுள்ளன.)

"நல்லவனான இலவணன் இத்தகைய துயர்களை அனுபவித்தது எதனால்", எனக் கேட்ட இராகவருக்கு வசிட்டர் கூறியன: 'இராச சூய யாகம்' என்பது பேரரசர்களால் செய்யப்படுவதாகும். இதற்கான ஏற்பாடுகளைச் செய்ய அரசனுக்கே ஓராண்டாகும். யாகம் முடிந்த பின்னர், பன்னிரண்டு ஆண்டுகள் வரை அதனாலுண்டான உடல் களைப்புத் தீராது. இலவணனின் முன்னோர் இத்தகைய யாகம் செய்தனர். இதனால், இலவணனும் இராசசூயயாகம் நடத்த மிகவும் விரும்பினான். ஆனால் முன்னோரைப் போன்று செய்யாது, ஒரு பகல் பொழுதிற்குள், யாகத்தின் அனைத்துச் செயல்களையும், வரிசைப்பாட்டின் படியாக, சரிவர, மனக் கற்பனையாக (மன அடக்கத்தோடு, அச்செயல் மட்டுமே எண்ணி, சரியாக முடிக்கும் 'மனோ பூசை' முறை) செய்து முடித்தான். ஆனால் அதற்கான துயரேதும் அனுபவமாகவில்லை. அதனை மனதளவிலாவது அவன் பெற வேண்டுமென, இந்திர தூதனாகச் சித்தன் வந்தான்.

மேலும், வசிட்டர் கூறியதாவது : "இராகவா, மாயையின் ஆற்றலை அறிய, இதனையும் கேட்பாயாக": தெய்வமாயையே சாம்பரிகனாக வந்தது எனுங் கருத்தை உணர்ந்து கொள்ள விரும்பிய இலவணன், தான் மயக்கத்தில் கண்டவையெல்லாம் உண்மைதானா என உறுதி செய்ய விரும்பினான். அமைச்சரோடு ஆலோசனை செய்த பின்னர், ஓர் படையுடன் காடு சென்றான். குதிரை சென்ற அதே வழி காடு, அடவி, மலைகள் என அனைத்தையும் தற்போதும் (நனவிலும்)

கண்டான். தான், கரிய மனையாளோடு வாழ்ந்த ஊருக்கும் சென்றான்: தான் வாழ்ந்த அதே இடங்களைப் பார்த்தான். அங்கு, ஒரு கிழவி, ஒரு நாள் முன்னர்க் காணாது போன அவளது உறவினர்களின் பெயர் கூறி அழுது கொண்டிருந்தாள். அவளது மருமகன், அரசகுலத்தோன் என்றாள். (இவளே, "கூன்கிழ மாமி" என முன்னம் கூறப்பட்டவளாவாள்.) இலவணன் அவளருகே சென்று, அவளது உறவினர் பற்றிக் கூறப் பணித்தான். கிழவி, அவளது விழிப்பு நிலையில் கூறியனவும், இலவணன், அவனது மயக்க நிலையில் அனுபவித்தவையும் ஒத்துப்போனது கண்டு வியந்தான். அவன்,

**"வேண்டுவனகொடுத்து இவளைவெந்துயர் தீர்த்துஅந்**
**நகரின்மீண்டுமேவி**
**நீண்டஉலகத்தியல்பும் மாயையின் வல்லபமும் அவன்நெடிது**
**கண்டான்"**

என்பதாக வசிட்டர் கூறினார்.

**தத்துவப்பகுதி :** இலவணன், மன மயக்க நிலையில் கண்ட காட்சிகளை, அதன் பின்னர், நனவு நிலையில் (உடலோடு) சென்று அவனே கண்டது விந்தையாகும். ஆனால் மற்றொரு ஊரில், நனவு நிலையில் உள்ள 'கூன்கிழமாமி' போன்றோருக்கு, வேறொருவனின் (இலவணன்) மயக்கக் கனவு, அனுபவமாதல் விந்தையினும் விந்தை. இது கூடுமா எனக் கேட்ட இராகவருக்கு, "மாயையின் வல்லமையைக் காட்டவே இவ்வாறு கூறப்பட்டது. காதி கதையால் இது மேலறியலாகும்", என வசிட்டர் கூறினார்.

மாயையின் பேராற்றல், பசிப்பிணியின் கொடுமை மற்றும் நம் மன விரிவே உலகம், என்பனவற்றை முற்கதைகளில் கூறப்பட்டுள்ள இத்தகைய கருத்துக்களின் தொடர்ச்சி எனலாம். இவைபற்றி இங்கு, கீழ்க்கண்டவாறு தெரிவிக்கப்பட்டுள்ளது:

பிரம்ம ஆற்றலே (மாயை) நம் மனமாகிறது. நம் மனதின் விரிவே உலகம். இது, "தீரப் பெருந்தகை பரத்தின் விகாரமே மனமாம் பேருலகு என்றனன்" எனப்படுகிறது. விசாரணையின் மூலமாகப் பற்று நீக்கிய ஒருவன், அதன் பின்னர், "பற்று என்பது காலம் கடந்து (அநாதி), அது

தொடர்ந்து வருவது" என அயர்ந்து போதல் துன்பமாகும். ஆதலால், விசாரணையைச் செய்து முடித்ததால் கிட்டிய உறுதியினின்றும் நழுவக் கூடாது. விசாரணையை ஆசையற்ற மனதோடு செய்ய வேண்டும்.

"அந்தமற்றுஒன்றாய் விகற்பமற்று அறிவாய் அழிவிலாப்
பரம்பொருள்இருக்க
பந்தமுற்றவரார் முத்திபெற்றவரார் பாவனை விகற்பமே
அனைத்தும்"

நிர்மல ஆன்மாவுக்குப் பற்று இல்லை என்பதால், நிர்மல மனதுடையவனைப் பற்று எவ்வாறு பற்றும்? ஆனால் விசாரணையற்றவனுக்கு, மன அலைவு காரணமாக, அண்மைத்தானது, தூரம் போலும், ஒரு கணம் என்பது கற்பம் போலும் தோன்றும். அவன், எண்ணங்களை விரித்துக் கொண்டே போவதுதான் பற்றாகும். அவனது எண்ண வலிவால் (சங்கற்பம்), மிகுந்த மயக்கமடையும் வாய்ப்பும் உண்டு. சங்கற்பம் என்பது மனத் தொடர்புடையது. ஆதலால் இன்பதுன்ப அனுபவிப்பும் மனதிற்கேயாகும். (சுக துக்கம் என்பன ஆன்மாவிற்கு அல்ல). இலவணன், சித்தனின் செயலால் மோகித்து (ஈடுபாடும், பேராசையும் அடைந்து) பற்றுடையவனானான். அவன் விசாரணை செய்யவில்லை. ஆனால் சங்கற்பத்தால் மயங்கினான்; சுக துக்கமும் அனுபவித்தான்.

ஒரு தத்துவத்தை விளங்குவதற்காக, உலகியலை உவமையாக்கிக் கூறுவதை நாம் அறிவோம். அதற்கு மாறாக, இக்கதையில், உலகியலுக்கு அழுத்தம் காட்ட, தத்துவத்தை உவமையாக்கிக் கூறப்படுகிறது. எடுத்துக்காட்டாக,

1) நீண்ட பயண முடிவாக அவதிப்பட்டமையை, "அறிவறு மனத்தால் அயர்வுறு போகத்து அறிவிலார் மருண்டுபோவது போல்" எனவும்,
2) மிகவும் துன்புற்றுப் பாலைவனத்தைக் கடந்ததை, "குடும்ப பாரத்தை விவேகிகள் கடக்கும் கொள்கைபோல்", எனவும்,
3) தன்னைவிட்டுப் பிரிந்து போனதை, "கங்கை கலந்தவர் பாவமேயென்ன", எனவும்,

4) கதிரவன் எழுந்ததை, "மனத்திருள் அகற்றும் அறிவுபோல்", எனவும்,

5) எதிர்பார்த்தது கிடைக்காத போது, "வருதவம் செயாதோர் விரும்பிய பொருள்போல்", எனவும்,

6) நீண்ட துன்பத்தின் நடுவே சிறிது இன்பம் கிட்டியதை, "வினை நரகேறிப் பழவினையோடே மேவிய இன்பமதென்ன" எனவும் கூறப்பட்டுள்ளமை புதுமையாகும்.

(பிற்குறிப்பு : நான்கு நாழிகை நேரத்திற்குள்ளாக, இலவணனின் மனமானது, ஒருமுக வாழ்க்கையின் திட வாசனை பெற்றுவிட்டது எனக் கூறுவதனால், காலம் நிலையற்றது என்பது உறுதி செய்யப்படுகிறது. அலைவுடைய மனதால் நாம் கால அளவை செய்கிறோம். இம்மனம், மாயையின் ஆற்றலுக்கு உட்பட்டது. ஆதலால், காலம் என்பது எவ்வளவு உண்மை என்பதை நாமே நிலைப்படுத்திக் கொள்ள வேண்டும் எனும் கருத்து இங்கு பொதிந்துள்ளது.

பசியின் கொடுமை பற்றிக் கற்கடி கதையிலும் "கூறப்பட்டுள்ளது. (III/03/06) பசி வந்திடப் பத்தும் பறந்து போம்" என்பதை வலியுறுத்த, விளையாட்டாக, இட்டுக் கட்டி இக்கதை கூறப்படுகிறதேயன்றி, குல வேறுபாடுபற்றிக் கூறுவது இங்கு தலையாகியதல்ல. ஏனெனில், ஒருமைப்பாட்டை வலியுறுத்தும் ஞான ஆசிரியரால் குல வேறுபாடுகளைக் காண இயலாது.

காதி கதையால் இது மேலறியலாகும் என இராகவருக்குக் கூறப்பட்டது. அக்கதை, இன்னும் 12 பகுதிகள் கடந்தபின், எண் V/05/23ல் வருகிறது. அங்குக் கூறப்படும் தத்துவம் இராகவரின், தற்போதைய வினாவிற்கு மறுமொழியாகும். இதற்கான விளக்கம் நீளும். ஆகையால் அதனைக் காதி கதையிலேயே பார்ப்போம்.)

*(தொடரும்...)*

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

நீண்டநாள் வாழ விரும்புவோர் சுவாசபந்தனம் என்ற பிராணாயாமத்தை மேற்கொள்வர். பிராணாயாமம் என்பது சித்தர்கள் உலகுக்குத் தந்த அற்புதமான நெறி. இவ்வழியை மேற்கொண்டார்க்கு வாணாள் கூடுமென்பர். இது பற்றிய விரிவான விளக்கம் இதோ! ஒரு நாளில் ஒரு மனிதன் வெளிவிடும் மூச்சுக்காற்றின் எண்ணிக்கை 27600 ஆகும். இதில் 15400 சுவாசங்கள் உள்ளே சென்று மூலாதாரத்துள் ஒடுங்குகின்றன. 7200 சுவாசங்கள் வெளியே சென்று பாழாகின்றன. இப்படிப் பாழாகிச் செல்லும் சுவாசங்களைத் தடுத்து நிறுத்தும் கலையைத்தான் சித்தர்கள் பிராணாயாமம் என்றனர்.

நாள் ஒன்றுக்கு இருபத்து ஏழாயிரத்து அறுநூறு
நலமான சுவாசந்தான் எழுந்திருக்கும்
கோளொன்றிப் பதினையாயிரத்து நானூறு
குவிந்த மூலாதாரத்தில் ஒடுங்கும்
பாளொன்றி ஏழாயிரத்தை இருநூறு சுவாசம்
பாழினில் பாய்ந்திடும் என்றறிக பின்னை
ஏளொன்றி இதனையே சுவாசித்தால்
எப்போதும் பாலனாய் இருக்கலாமே.

என்று யூகி முனிச்சித்தர் பாடலொன்று சொல்கின்றது.

திருமூலர் தாம் எழுதிய திருமந்திரத்தின் மூன்றாம் தந்திரமான அட்டாங்க யோகத்தில் மூச்சுக் காற்றின் பயணத்தைப் பற்றி இவ்வாறு எழுதுகிறார்.

பன்னிரண் டானைக்குப் பகல்இரவு உள்ளது
பன்னிரண் டானையைப் பாகன் அறிந்திலன்
பன்னிரண்டானையைப் பாகன் அறிந்தபின்
பன்னிரண்டானைக்குப் பகல் இரவு இல்லையே

அதாவது 12 விறற்கடை செயல்படும் மூச்சு அதாவது பிராணன் ஆகிய சூரியனுக்குப் பகல் இரவு என்ற காரணங்கள் உள்ளன.

மூக்கில் இருந்து தொண்டை வழியாகப் பிராணவாயு இடகலை பிங்கலை நாடிகளின் வழியாக மாறி மாறி இயங்கும். அதனை உயிர் அறியாது. மூச்சின் தன்மையை அறிந்து அதை வசப்படுத்திய பிறகு அது சுழுமுனை நாடியில் இயங்கும்.

நடுநிலைமை என்ற அதிகாரத்தில்

நடுவுநின் றார்க்கன்றி ஞானமும் இல்லை
நடுவுநின் றார்க்கு நரகமும் இல்லை
நடுவுநின் நார்நல்ல தேவரும் ஆவர்
நடுவுநின் றார்வழி நானும்நின் றேனே

நடுநிற்றல் என்பது சிவயோகத்தின் பேறு ஆகும்.

இதனை அட்டாங்க யோகப் பகுதியிலே திருமூலர் விளக்குகின்றார். மேடம் அல்லது சிம்மத்தில் முடிகின்ற 12 நிறைந்துள்ள முறைமையை அடிப்படையாக வைத்து மூச்சுக் காற்றை விளக்கி அத்துவன் யோகத்தின் உறுப்புக்கள் எட்டையும் விளக்கி யோக வாழ்வில் விதி இவை விலக்கு இவை என்று நந்தியால் வகுக்கப் பெற்றது.

உரைத்தன வற்குஅரிஒன்று முடிய
நிரைத்த இராசி நிறைமுறை எண்ணிப்
பிரச்சதம் எட்டும் பேசிய நந்தி
நிரைத்த இயம நியமம் செய்தானே

**இயமம் - விலக்குவன**

கொல்லாமை - பொய்கூறாமை - களவின்மை - எக்குணத்தும் நல்ல குணம் - அடக்கம் உடைமை - நடுச்செய்யும் வன்மை - பகுத்துண்ணல் - மாசின்மை - கள் காமத்து இன்மை இவையின்றிச் சுழுமுனையை இயக்குதல் இயமம்.

கொல்லான் பொய்கூறான் களவுஇலான் எக்குணத்தும்
நல்லான் அடக்கம் உடையான் நடுச்செய்ய
வல்லான் பகுத்துஉண்பான் மாசுஇலான கள்காமம்
இல்லான் இயமத்து இடையில் நின்றானே

என்பது பாடல்

### நியமம் - வளர்க்கும் செயல்கள்

ஆதியானவனாய் உலகைப் படைத்தவனும் வேதப்பொருளாய் உள்ளவனும் சோதி வடிவானவனும் ஆகிய சிவனை மூலக்கனலினைத் தலையுச்சியான ஆயிரம் இதழ்த் தாமரைக்கு ஏற்றிஅங்கு பராசக்தியை உடன்கண்டு மகிழ்வதே நியமம்.




ஆதியை வேதத்தின் அப்பொருள் ஆனானைச்
சோதியை அங்கே கூடுகின்ற அங்கியைப்
பாதியுள் மன்னும் பராசக்தி யோடுஉடன்
நீதி உணர்ந்து நியமத்த னாமே.

என்பது பாடல்

மேலும் இரு பாடல் நியமம் பற்றிச் சொல்கிறது.

தூய்மை அருளுடன் சுருக்கம் பொறைசெம்மை
வாய்மை நிலைமை வரைதலே மற்றினை
காமம் களவு கொலைஎனக் காண்பவை
நேமியில் ஈர்ஐந்து நியமத்தன் ஆமே.

இயமம் நியமம் முதலானவற்றை விளக்கிய திருமூலர் அடுத்து ஆதனம் அதாவது யோகத்திற்குரிய இருக்கைகள் பற்றிச் சொல்லத் தொடங்குகிறார். யோகத்திற்கெனப் பல ஆதனங்கள் இருப்பினும் அவற்றுள் 4 ஆதனங்களைச் சிறந்தன என்று குறிப்பிடுகின்றார். அதாவது பத்திராசனம் (இலை இருக்கை) குக்குடாசனம் (மயில் இருக்கை) சிங்காதனம் (சிங்க இருக்கை) கோமுகம் என்ற நான்காசனங்களைச் சிறந்தவை என்பதோடு இன்னும் பல ஆசனங்கள் உள்ளன என்றும் உரைக்கின்றார்.

பத்திரம் கோமுகம் பங்கயம் கேசரி
சொத்திகம் வீரம் சுகாதனம் ஓர்ஏழும்
உத்தமம் ஆம்முது ஆசனம் எட்டுஎட்டுப்
பத்தொடு நூறுபல் ஆச னங்களே.

என்ற திருமூலர் யார் நியமத்தன்? என்பதையும் குறிப்பிடுகின்றார்.

தவம்செபம் சந்தோடம் ஆத்திகம் தானம்
சிவன்தன் விரதமே சித்தாந்தக் கேள்வி
மகம்சிவ பூசைஒண் மதிதொல் ஈர்ஐந்து
நிவம்பல செய்யும் நியமத்தன் ஆமே.

இனி அவர் அடுத்ததாகப் பிராணாயாமம் பற்றிப் பேசத் தொடங்குகிறார். அதில் அவர் உயிருக்கு வாகனம் எது? என்பதை விளக்குகிறார்.

ஐம்பொறிகளுக்கும் நாயகன் நம் உடம்பில் இருப்பவன் அவன் செலுத்துகின்ற குதிரை உயிர் மூச்சு என்பதாகும். அது மெய்யரை ஏற்றிக் கொள்ளும். பொய்யரை வீழ்த்திவிடும்.

ஐவர்க்கு நாயகன் அவ்வூர்த் தலைமகன்
உய்யக்கொண்டு ஏறும் புரவிமற்று ஒன்றுஉண்டு
மெய்யர்க்குப் பற்றுக் கொடுக்கும் கொடாதுபோய்ப்
பொய்யரைத் துள்ளி விழுத்திடும் தானே.

அந்தக் குதிரையை எப்படிச் செலுத்த வேண்டும்? ஆனால் அந்தக் குதிரை இரண்டாகும். நாசியில் இருந்து வரும் காற்றை வாசி என்பர். ஏசி வாசி என்பது குதிரையைக் குறிக்கும் சொல்லாகும். இந்த இரு குதிரைகளையும் பிடிக்கும் தந்திரம் அறிந்தவர் இல்லை. குருவின் அருள் இருந்தால் மட்டுமே வயப்படுத்த முடியும்.

ஆரியன் நல்ல குதிரை இரண்டுஉண்டு
வீசிப் பிடிக்கும் விரகுஅறிவார் இல்லை
கூரிய நாதன் குருவினருள் பெற்றால்
வாரிப் பிடிக்க வசப்படும் தானே.

வாழ்க்கையை அனுபவிக்கும் விதம்பற்றித் திருமூலர் இவ்வாறு கூறுகிறார்.

உயிராற்றல் ஆனது மூச்சுக் காற்றுடனும் மனத்துடனும் பல்வேறு வழிகளில் செல்லாமல் அடங்கும் போது நிலைபேற்றை அடையும். பின்னர் அதற்குப் பிறப்பும் இல்லை. இறப்பும் இல்லை.

எனவே மூச்சுக் காற்றை வழிமாற்றிச் சுழுமுனை நாடியில் செலுத்தி மவுனம் அடைந்து உயிர் முறைப்படி பெற்று நுகரும் பேற்றினை அடையலாம்.

இளமை நிலைக்கும் வழியைக் கூற வந்த திருமூலர் "மூச்சை இழுத்து வளைந்து கும்பகம் செய்தால் அதாவது சேர்த்து வைத்தால் (மனத்தின் உள்ளே நிறுத்தினால்) முதுமை பேற்ற காலத்திலும் உடல் இளமையாக இருக்கும். இவ்வாறு மூச்சடக்கும் முறையான பிராணாயாமத்தைக் குருவருள் மூலம் கற்று இளமை பெறுவதற்கான வழியைப் பெறலாம். இதனைத்தான் பாரதியார் "வாசியினைக் கும்பகத்தால் வலியக் கட்டி" என்று பாடுவார்.

"வளியினை வாங்கி வயத்தில் அடைக்கில்
பளிங்குஒத்த காயம் பழுக்கினும் பிஞ்சாம்
தெளியக் குருவின் திருவருள் பெற்றால்
வளியனும் வெட்ட வெளியனும் ஆமே.

என்பார் திருமூலர்.

அடுத்து மூச்சு விடும் முறைபற்றிப் பேசுகிறார் திருமூலர். ஒருவர் எந்த நிலையில் எந்த ஆசனத்தில் இருந்தாலும் இடமூக்கின் வழியே மூச்சை இழுத்தால் உடல் கெடாது.

மூச்சை இழுப்பதும் உள்ளே நிறுத்தி வெளியே விடுவதும் முறையான அளவுகளுக்குள் அடங்க வேண்டும். இப்படிச் செய்து அனுபவமுற்றார்க்குத் தொண்டையில் சங்கின் ஓசை கேட்கும். சிவவாக்கியரும் இதனைத் தாரை ஊதுதல் என்பார். இங்கு பூரி என்பது மூச்சுக் காற்று. இழுப்பதும் விடுவதுமாக இருமுறை இயங்கும் மூச்சை உள்ளே நிறுத்தும் கால அளவைப் பற்றிக் கூறுகிறார்.

மூச்சை இழுக்கும் போது தொண்டை, இதயம், வயிறு ஆகியன பருக்க வேண்டும். வெளியே விடும்போது இவை உள்ளடங்கி இருக்க வேண்டும். இதற்கிடையில் மூச்சை நிறுத்த வேண்டும். இடப்பக்கம் மூக்கின் வழியே இழுக்கும் போது 16 மாத்திரை (1 மாத்திரை என்பதன் அளவு ஒரு கண்ணிமை அல்லது ஒரு கைநொடி) நேரம் உள்ளிழுக்க

வேண்டும். மூலக்கனலை எழுப்பிட 64 மாத்திரை உள்ளே நிறுத்தி வெளிவிடும்போது வலப்பக்க மூக்கின் வழியாக 32 மாத்திரை அளவு வெளிவிட வேண்டும். இதனையே பிராணாயாமம் என்பர்.

வாமத்தில் ஈரெட்டு மாத்திரை பூரித்தே
ஏம்உற்ற முப்பத்தி ரண்டும் இரேசித்துக்
காமுற்ற பிங்கலை கண்ஆக இவ்விரண்டு
ஓமத்தால் எட்டுஎட்டுக் கும்பிக்க உண்மையே.

(வாமம் என்பது இடப்பக்க நாசி, பூரித்தல் - பெருக்க வைத்தல், இரேசித்தல் - வெளிவிடல் , பிங்கலை - வலப்பக்க நாசி, கும்பித்தல் - சேர்த்தல் அல்லது நிறுத்தல் , எட்டு எட்டு - அறுபத்து நான்கு)

உள்ளிழுக்கப்படும் மூச்சு உடலின் கண்ணே உள்ள தச நாடிகள் என்கின்ற 10 நாடிகளிலும் சேமிக்கப்படவேண்டும். (அத்தி, அலம்புடை, இடை, காந்தாரி, குரு, சங்கினி, கிருகை, சுழி, முனை, பிங்கலை, புருடன் என்பன தசநாடிகள்) மூச்சை வெளிவிடும் பொழுது மூக்கருகே தவிட்டின் ஒரு துளியை வைத்தால் அது ஆடாது இருக்கும்படி மெதுவாக விட வேண்டும். மூச்சினை உள் நிறுத்தும் பொழுது அது மேற்பக்கமாகவோ கீழ்ப்பக்கமாகவோ சிறிதும் வெளியேறலாகாது. இத்தகைய முறையில் பிராணாயாமம் செய்வோர் இயமனையும் வெல்லலாம். இதைத்தான் "காற்றைப் பிடிக்கும் கலையறிந்தார் கூற்றைப் பிடிக்கும் திறனறிந்தார்" என்பர்.

மேலே கூறிய உணர்வு நிலைகளில் மேம்பட்டால் இறைவனைச் சோதியாகவே நமக்குள் தாங்கி நன்மை பலவற்றைப் பெறலாம். வேதங்கள் தேடியும் காண இயலாத அவனை இன்றே, இங்கே, இப்பொழுதே காணலாம். நாம் இறவாமலும் இருக்கலாம். இதனைப் பிரத்தியாகாரம் என்பர்.

நாபி எனப்படும் உந்திக்குக் கீழே மூலாதாரம் 12 அங்குலத் தொலைவில் உள்ளது. அங்கு மூச்சை நிறுத்தி மந்திரத்தைத் தியானிக்கும் முறையை மக்கள் அறியவில்லை. அறிந்தவர்கள் உடம்பில் இறைவன் குடி புகுவான்.

அடுத்துக் குண்டலினி யோகம் பற்றிக் கூறுகிறார். மூலாதாரத்திற்கு இரண்டு விரற்கடை மேலும், குறிக்கு இரண்டு விரற்கடை கீழுமாகப் பாம்பு தலைகீழாகக் கிடப்பதுபோல் ஒரு சுடர் ஒன்று உள்ளது. உந்திக்கு 4 விரற்கடை கீழே உள்ளது. அதனை யோகசக்தியால் மேல் எழுப்பி ஆயிரம் இதழ்த் தாமரையாகிய சகஸ்ராகாரத்தை அடையச் செய்ய வேண்டும். இதனையே குண்டலினி யோகம் என்பர்.

"நாபிக்குக் கீழே பன்னிரண்டு அங்குலம்
தாபிக்கும் மந்திரம் தன்னை அறிகிலார்
தாபிக்கும் மந்திரம் தன்னை அறிந்தபின்
கூவிக் கொண்டு ஈசன் குடிபுகுந் தானே"

"மூலத்து இருவிரல் மேலுக்கு முன்நின்ற
பாலித்த யோனிக்கு இருவிரல் கீழ்நின்ற
கோலித்த குண்டலி உள்எழு செஞ்சுடர்
ஞாலத்து நாபிக்கு நால்விரல் கீழதே..

"நாசிக்கு அதோமுகம் பன்னிரண்டு அங்குலம்
நீசித்தம் வைத்து நினையவும் வல்லையேல்
மாசித்த மாயோகம் வந்து தலைப்பெய்யும்
தேகத்துக்கு என்றும் சிதைவு இல்லையாமே"

*(தொடரும்....)*

---

**பிழை திருத்தம் :**

சுபானுபவத் திருவாக்கு முதல் பகுதியில் (திருநெல்லை, பங்குனி 2015 பக்கம் 20) இந்நூல் 675 செய்யுள்களை உடையது எனத்தரப்பட்டுள்ள எண்ணை, 300 எனத் திருத்திக்கொள்ளுமாறு வேண்டப்படுகிறது. (கட்டுரையாளர்)

---

# கோயிலூர்ப் புராணம்

## (கொற்றவாளீசப் படலம்) (தொடர்ச்சி)

கழலுடைக் காலும் யாத்த கச்(சு)அடை அரையும் வெய்ய
தழல்உடைக் குயம்கொள் கையும் தாங்கிய நவியத் தோளும்
எழலுடைக் குரலும் உள்ளார் யாவரும் குழுமி யாங்கு
நிழல்உடைத் தருக்கள் எல்லாம் நிரைநிரைதடிந்து சாய்ப்பார் 42

அணைதரும் மூலம் முற்றும் அகழ்ந்(து)எடுத் திடுவர் சில்லோர்
இணைதரு வானம் தோயும் இரும்பணை தறிப்பர் சில்லோர்
பணைதரு பராரைச் சுற்றும் படர்ந்(து)அற எறிவர் சில்லோர்
பிணைதரு கனிகாய் ஆதி வேண்டுவ பெறுவர் சில்லோர் 43

எறிதரு நவியம் கூர்வாய்க் குயம்எறி மள்ளர் ஆய
முறிதரு பிணியோர் மூன்றும் முற்(று)உற நெருக்க லாலே
செறிதரு கானம் என்னும் உடம்பினுள் சேர்ந்து வாழ்ந்த
குறிதரு மிருகம் ஆய உயிர்புறங் கூடிற்(று) அன்றே 44

எஞ்சிய(து) ஒன்றே ஆக யாவையும் களைவார் போல
விஞ்சிய பெருமை சான்று விளங்குவோர் சமியேநிற்க
வஞ்சிய தருக்கள் எல்லாம் மடிஅறக் களைந்து சாய்த்தார்
துஞ்சிய வலியால் மிக்குத் தொலைந்திடு தொழில்மேற் கொண்டார்45

காடுமுற்(று) ஒழிந்த பின்னர் மண்தொடு கருவி யாளர்
மேடுமற்(று) அவல்இ லாமை வினைசெயல் அனைய பூமி
பாடும்அற் புதம்சால் அந்தப் பதிவயின் அமர்ந்து நாளும்
கூடுமெய்த் தவம்செய் வார்தம் மனம்எனக் குலாயது அன்றே 46

தரைசமம் ஆய(து) ஓர்ந்து தபதியர் பலரைக் கூவிக்
கரைஅறு நிதியம் வீசி ஆலயம் காண்பீர் என்று
புரைதவிர் அமைச்சர் கூறப் புத்திஎன்(று) அவரும் ஏற்று
விரைதரச் சிற்பம் வாய்ப்பப் புரிதொழில் மேயி னாரே 47

வரைபல பிளக்கின் றாரும் வரம்புஅறப் பிளந்(து) யாவும்
விரைசெலற் பகடு பூண்ட பண்டிமேல் ஏற்று வாரும்
புரைதப நடத்து வாரும் பொருக்கென விழிச்சு வாரும்
உரைபெரும் தொழில்செய் வாரும் நுண்தொழில் உஞற்று வாரும்48

அடிநிலை பறிக்கின் றாரும் அதில்சிலை செறிக்கின் றாரும்
படிதர நெருக்கு வாரும் இட்டிகை பரப்பு வாரும்
இடிபட நீறு குற்றி எடுத்(து)எடுத்(து) ஏற்று வாரும்
கடிதல்இல் கருப்புக் கட்டிக் கரைத்தளா விடுகின் றாரும் 49

பொருவில்தூண் நிறுத்து வாரும் போதிகை ஏற்று வாரும்
வெருவில்உத் தரம்மேல் ஏற்றி விளங்குகல் பரப்பு வாரும்
ஒருவில் கைப்பிரம்பு நீட்டி ஓ(டு)என உரப்பு வாரும்
செருவில்மூண் டார்போல் இன்ன செய்தொழில் தலைநின் றாரே 50

திகழ்கருக் கிருகம் அத்த மண்டபம் சிற்பம் வாய்ந்த
புகழ்மகா மண்டபம்சீர் பொலி நட மண்ட பம்கார்
அகழ்முடி மன்றம் சாறு கொள்ளுமண் டபம்அங்(கு)
இகழ்(வு)அறப் பொலிய நிற்கும் மடைப்பள்ளி யாக சாலை 51

அருள்உரு(வு) ஆய எங்கள் அம்மைவாழ் விமானம் கோயில்
மருள்உரு(வு) ஒழிக்கும் ஏனை வானவர் மருவும் கோயில்
தெருள்உரு நோக்கின் நல்கும் தெய்வம்கோ புரம்சூழ் இஞ்சி
இருள்உரு(வு) ஒழிப்பார் கும்பிட்(டு) இறைஞ்சிடும் முற்றம் மற்றும்52

தழைதரு சமிசூழ் வேதி தண்மதுப் பொய்கைச் சுற்றும்
விழைதரு தகைச்சோ பானம் வேதியர் ஆதி நால்வர்
உழைதரும் ஏனை யோர்கட்(கு) உறையுள்நால் வீதி கூவல்
குழைதரு மடம்முன் ஆன யாவும்மேல் குலவச் செய்தார் 53

சொல்அரு மகிழ்ச்சி பொங்கச் சூழ்ச்சியின் வல்லோர் ஆதி
வெல்லரும் ஏனை யோரும் மேவவந்(து) அரசன் நோக்கிப்
புல்லரும் வனப்பு வாய்ந்து பொலிவிழாத் தேவர் முன்னாக்
கல்அரும் தளிக்கு வேண்டும் கருவிகள் அனைத்தும் சேர்ப்பான் 54

கொடிகுடை கவரி ஆல வட்டம்முற் கூறும் யாவும்
படிபுகழ் இடபம் வையம் ஆதிய பலவும் நாளும்
ஒடி(வு)அரும் குடம்முன் ஆக உரைத்தபாத் திரமும் மற்றும்
வடி(வு)அமை மணிப்பூண் வட்டம் வயங்குவ யாவும் சேர்த்து 55

நிலம்முதல் ஆய செல்வம் நிரம்(பு)உறப் பொருத்தி நன்னாள்
குலமுதற் சைவர் தம்மால் கும்பநீர் ஆட்டு வித்து
நலம்மலி சிறப்பு வாய்ந்த பூசையும் நகுவி ழாவும்
இலகுகா மியமும் என்றும் நடக்குமா(று) இயற்றி னானால் 56

தினமொடு பக்க மாதம் செறியிரு தாட்டை ஆதிக்
கனம்மிகு விழவு மல்க மங்கலம் கவின்று பூப்ப
அநகமா மறையோர் ஆதி யாவரும் நெருங்கி வாழத்
தனதன்மா நகரே என்ன நகர்வளம் சமையச் செய்து 57

தானும்அந் நகர்நீங் காது தக்கமா ளிகையின் மேவி
வானும்மண் உலகும் ஏத்த மறையவர்க்(கு) அன்ன தானம்
தேனும்இன் பாலும் நெய்யும் திருந்துபல் சுவையும் தேவர்
ஏனும்வாய் ஊற நல்கி இன்பம்துய்த்(து) இருப்ப(து) ஆனான் 58

விசேடமாம் அபிடே கங்கள் விசேடமாம் மலர்த்தா மங்கள்
விசேடமாம் ஒளிர்தீ பங்கள் விசேடமாம் நிவேதனங்கள்
விசேடமாம் உபசா ரங்கள் விசேடமாம் வருவாய் மற்றும்
விசேடமாய் நடத்தி வந்தான் வீரபாண் டியன்தான் மன்னோ 59

கோலம்ஆர் மதுத்த டாகம் குடைந்துவெண் நீறு பூசிச்
சீலம்ஆர் உருத்தி ராக்கம் திகழ்தரப் பூண்டு முத்தி
மூலமாம் எழுத்(து)ஐந்(து) எண்ணிக் கொற்றவாள் ஈசர் முன்போய்க்
காலம்ஆர் வத்தில் போற்றும் கடமையில் தலைநின் றானே 60

அன்னவன் இவ்வா(று) ஆய நியதிஉற்(று) அமரும் நாளில்
முன்னவன் கருணை மூர்த்தி முப்புவ நேசன் தாளும்
பொன்அவிர் திதலை பூத்த புணர்முலை உமைபொற் றாளும்
நன்னர்கொள் சேவை செய்வான் நாம்அங்குச் சென்றோம் ஆக 61

நம்முடை வடிவு தேர்ந்து நன்மதி அமைச்ச ரோடும்
விம்முபேர் உவகை பூண்டு வேந்தன்வந்(து) அடியில் வீழ்ந்தான்
மம்மரின் ஒழிந்து தூய மனத்தனாய் வயங்கா நின்ற
செம்மலே எழுதி யால்என்(று) ஆசியும் செப்பி னேமால் 62

எழுந்துநின்(று) இருகைகூப்பி இருங்கடல் பெருநீர் முற்றும்
உழுந்(து)அள(வு) ஆக்கி உண்ட உத்தம முனிவர் ஏறே
செழுந்தமிழ்ப் புயலே நின்தாள் தெரிசனத் தால்நா யேற்கு
விழுந்ததால் அவித்தை மேன்மேல் எழுந்தது மெய்ம்மை ஞானம் 63

எண்ணரும் தவஞ்செய் தாலும் எய்தரும் சித்த சுத்தி
நண்ணரும் பிரம்ம ஞானம் நாயினேன் அடைந்தேன் என்று
கண்ணரும் மகிழ்ச்சி கூரக் கண்கள்நீர் அருவி பாயப்
பண்ணரும் துதிசெய் தானைப் பார்த்(து)இது கூறி னேமால் 64

முந்துபல் பவங்கள் தோறும் முயன்றுசெய் தவத்தின் பேற்றால்
இந்துசேர் முடியார் மேய இத்தலம் அடையப் பெற்றாய்
நந்துமா தவம்நல் தானம் நன்மகம் ஆதி செய்யார்
உந்தும்இத் தவத்தின் மேவார் உண்மை ஈ(து) உணர்தி வேந்தே 65

எண்ணிய சித்தி எல்லாம் எண்ணிய படியே நல்கிக்
கண்ணிய பிரம ஞானம் கையின்ஆ மலகம் ஆக்கும்
தண்ணிய தவம்ஈ(து) ஒன்றே தரையில் மற்(று)எங்கும் இல்லை
நண்ணிய விசும்(பு) இடத்தும் இல்லையால் நாம வேலோய் 66

மருவிநீ வேட்டை ஆட வந்ததும் ஒருவாள் பற்றிப்
பொருவில்இத் தலத்தில் வந்து புக்கதும் வாள்கா ணாது
வெருவில்வெம் புலிமுன் எய்தி விடுத்திவே தியனை என்று
பரிவில்நீ உரைக்க அப்புல் பனவனோ(டு) ஒளித்த வாறும் 67

திரிபுவ நேசர் முன்பு சென்றுநீ பணிந்த வாறும்
அரிபிர மருக்கும் எட்டா அரும்பெறற் காட்சி நல்கி
உரியவாள் உதவிக் கொற்ற வாளீசர் எனும்ஓர் பேரும்
புரியமற் றவர்நீ வேண்டப் பூண்டதும் உணர்ந்தாம் அன்றே 68

உடம்(பு)இடை உவர்ப்பு வைத்தாய் உயர்சிவ தருமம் செய்வாய்
மடம்படும் உணர்ச்சி நீத்தாய் வாய்த்தனை சித்த சுத்தி
இடம்படு நின்னை ஒப்பார் எவ்வுல கத்தும் இல்லை
நடம்படு களிநல் யானைக் காவலர் ஏறே என்றாம் 69

என்றலும் நெக்குநெக்(கு) ஆங்கு இணைஅடி மீட்டும் போற்றி
மன்றஇன் னனகூ(று) என்றான் மற்றவை யாவைஎன்று
தன்துணை இல்லான் ஆய சைமினி முனிவன் கேட்பக்
குன்றவில் பெருமாற்(கு) அன்பு கூர்குறு முனிவன் கூறும் 70

**கொற்றவாளீசப் படலம் நிறைவுற்றது.**

*(தொடரும்...)*

## அரிவாள்தாய நாயனார் - ஆனாயநாயனார் பக்தி வெளிப்பாடு (தொடர்ச்சி)

(முனைவர் இரா. கீதா, உதவிப் பேராசிரியர்,
இராமசாமி தமிழ்க்கல்லூரி, காரைக்குடி)

**ஆனாய நாயனார்:**

கார்த்திகை மாதம் அத்தம் நட்சத்திரத்தில் ஆயர் குலத்தில் மங்கலவூர் என்னும் ஊரில் பிறந்தவர் ஆனாயனார். இவரது புல்லாங்குழல் ஓசைக்கு உலகமே மயங்கும். அப்படிப்பட்ட திறமை மிக்கவர் அடியார்.

**மங்கல ஊர் - ஊர் வர்ணனை:**

மணமுள்ள சோலையில் வான்சந்திரன் வந்து உலாவும். ஒன்றின் மீது ஒன்று அடுக்கப்பட்ட வைக்கோல் போர் மீது மேகங்கள் மெல்ல ஊர்ந்து செல்லும் நீர்வளமிக்க மேல்மழநாடு என்பதாகும் மங்கல ஊர் என்னுமூர். பெருகிய ஆற்றுவெள்ளத்தில் அடித்துவரப்பட்ட சங்குகள் வாழையிலையில் ஏறிப் பின் வாழையில் பற்றிப் படர்ந்த கொடிகள் மீது ஏறி அங்கு நின்ற பாக்கு மரத்தின் மீது ஏறி அங்கு பாக்குமரத்தின் பாளைகள் பூவை உதிர்ப்பது போன்று முத்துக்களை உதிர்க்கும்.

"அங்கது மண்ணின் அருங்கலமாக அதற்கேயோர்
மங்கல மானது மங்கலமாகிய வாழ்மூதூர்" (பா.432)

என்று மங்கல ஊரினைப் பாராட்டுகின்றார் சேக்கிழார். அவ்வூரில் அறங்கள் பல செய்து வாழக் கூடிய சிறப்புப் பொருந்திய ஆயர் குலத்தில் பிறந்து வாழ்ந்து வருகின்றவர் ஆனாயனார்.

**ஆனாயரின் பணி:**

கோவலர்களாகிய இடையர்குலத்தினை வழி நடத்துபவராகிய

ஆனாயர் சிவபெருமானின் திருவடிகளில் அன்பு பொருந்திய இசையுடன் துளைக்கருவிக்குழல் இசைப்பதை மேற்கொண்டிருப்பவர். நாளும் இத்திருப்பணியினைச் செய்து கொண்டிருந்தார். ஆனிரைகளை மேய்ப்பது. அவற்றைப் பாதுகாப்பது போன்ற செயலினையும் செய்து கொண்டிருந்தார்.

**குழலிசை நுட்பம்:**

குழற் கருவியின் அமைப்பினையும் இசைக்கும் முறையினையும் மிக நேர்த்தியாக அமைத்துள்ளார் சேக்கிழார். இதனை

"அந்தமுதல் நாலிரண்டில் அரிந்துநரம் புறுதானம்
வந்த துளை நிரையாக்கி வாயுமுதல் வழங்குதுளை
அந்தமில்சீர் இடையீட்டின் அங்குலிஎண்களின் அமைத்து".

என்கிற பாடல் மூலம் விளக்குகின்றார்.

இதில் பழைமையான இசைக்கலை வேத நூல்களில் கூறிய படி வளர்ந்த மூங்கிலில் நுனியில் நான்கு பங்கிலும் அடியில் இரண்டு பங்கிலும் அரிந்து இடைப்பட்ட பகுதியை எடுத்து எடுத்துச் சுரங்கள் எழும் தானங்களின் வந்த துளைகளின் வரிசையை ஏற்படுத்தி முதலில் காற்று உண்டாக்கும் துளையையும் ஒவ்வோர் அங்குல அளவிலே துளைசெய்து என்கிறார்.

அப்படிப்பட்ட சிறப்பு வாய்ந்த குழலில் சிவ பெருமானின் ஐந்தெழுத்து நாமத்தினை இசைக்கின்றார் ஆனாயனார்.

**ஆனாயரின் தோற்றம்:**

ஆனாயர் அன்றும் ஆநிரைகளை வழக்கம் போல் மேய்க்கப் புறப்பட்டார். அவ்வாறு செல்லும் பொழுது அவரின் தோற்றம் எப்படி இருந்தது? என்பதினைச் சேக்கிழார் விளக்குகின்றார்.

"தலையை ஒரு புறமாகக் கோதி முடித்து அதில் கண்ணி மாலையினைச் சூடிக்கொண்டார். செங்காந்தள் பூவினைக் காதில் செருகிக்கொண்டார். கால்களிலே தோற் பாதுகையைத் தரித்துக் கொண்டார். கையிலே வெண்கோலும் வேய்ங்குழலும் எடுத்துக்கொண்டார்" என்கிறார்.

**ஆநிரை மேய்க்கச் செல்லுதல்:**

அப்பொழுது கார்காலம்; முல்லைநிலமானது பூத்துக் குலுங்கும். புதுமலர்ச் சோலை போலக் காட்சியளித்தது. ஆங்காங்கே கொன்றை மலர்கள் புது மலர்களைத் தாங்கியவண்ணம் எழிலுறக் காட்சியளித்தன. அக்கொன்றை மரத்தினை ஆனாயர் காண்கின்றார். அம்மரம் சிவபெருமான் போன்று காட்சியளிக்கின்றது. அடியாரின் ஐம்புலன்களும் பக்தியால் பூரித்தன; ஆனாயர் அம்மரத்தினை வளம் வந்து வணங்குகின்றார். தாம் வைத்திருந்த வேய்ங்குழல்கள் பலவற்றில் சிறந்ததான ஒன்றினை எடுத்தார். பரமனை நினைத்தபடியே பண் ஒன்றினை எழுப்பினார். சுத்த சுரத்திலே திரு ஐந்தெழுத்தை இசையுடன் அமைத்து முறையோடு சுருதி சேர்த்து வாசிக்க ஆரம்பிக்கின்றார். இதனை

"முத்திரையே முதலனைத்தும் முறைத்தானஞ் சோதித்து
வைத்ததுளை ஆராய்ச்சி வக்கரனை வழிபோக்கி
ஒத்தநிலை உணர்ந்ததற்பின் ஒன்றுமுதற் படி முறையாம்
அத்தகைமை ஆரோசை அமரோசைகளின் அமைத்தார்"

என்கிறார் சேக்கிழார். மேலும்

"மந்தரத்தும் மத்திமத்தும் தாரத்தும்" என்கிறார். இங்கு சேக்கிழாரை ஓர் இசைவல்லுநராகவே காண முடியும். அங்ஙனம் ஆனாயர் வாசித்த இசையின்பம் வெள்ளம் போல் பாய்ந்து ஓடியது. காந்தர்வ கானம்போல் இருந்தது.

**இசைச்சிறப்பு:**

அருகம்புல்லை மேய்ந்து கொண்டிருந்த ஆநிரைகள் அவரின் அருகே வந்து நின்றன. கன்றுகள் அனைத்தும் தாய்ப்பாலினை மறந்து இன்ப இசையில் தம் உணர்வினை இழந்து நாயனாரைச் சுற்றி நின்றன. பல்வேறு வேலைகள் செய்து கொண்டிருந்த ஆயர்கள் தங்கள் வேலைகளை மறந்து ஆனாயர் அருகில் வந்து நின்றனர். மலைகளில் வாழ்கின்ற தெய்வ மகளிர், வானவர், சாரணர், கின்னரர்கள் முதலியோர் தங்களை மறந்து ஆனாயர் இசைக்கு மயங்கி அங்கு வந்து நின்றனர். மக்கள் அனைவரும் தம் இன்ப துன்பங்களை மறந்து ஒன்றுபட்ட உள்ளத்தினராய் அங்கு வந்து குவிந்தனர்.

மயிலும், மானும், சிங்கமும், பாம்பும், அருவியும், காற்றும், கடலும் இவை அத்தனையும் ஆனாயரின் இசைக்கு மயங்கின. மண்ணுலகத்தில் எழுந்த ஆனாயரின் இசை சிவலோகத்திற்கு எட்டியது. ஆனாயரின் இசை வெள்ளத்திலே சிவபெருமான் மெய்யுருகி, உமா தேவியாரோடு காட்சியளிக்கின்றார்.

ஆனாயனாரின் இசைக்கு மனதினைத் தொலைத்து அவ்விசைக்குக் கட்டுப்பட்ட கங்காதரன் ஆனாயனாரை நோக்கி "வேய்ங்குழலை இவ்வாறு இசைத்துக் கொண்டே எம் அருகே வந்து அணைந்திடுவா!" என்று வாழ்த்தி அருளினார். ஆனாயர் இறைவன் அருகே அமர்ந்து வேய்ங்குழல் இசைக்கும் பேறு பெற்றார்; அவர் பெற்ற பேறு அருந்தவப் பேறு.

**முடிவாக:**

நிலையற்ற உலகத்தில் நாம் நிலை பெற்று வாழ்வதற்கான வழி வீடுபேறு அடைதல் என்பதனை நம் தமிழ்ச் சான்றோர்கள் அறிந்து வைத்திருந்தனர். அதன் வழி இறைவன் மீது தூய்மையான பக்தியினைச் செலுத்தி உலகில் நிலைபேற்றினை அடைந்தவர்கள் நாயன்மார்கள். எனவே அவர்களின் வாழ்வினைப் படிப்பவர்களும் இவ்வுலகில் சிறப்புப் பெறுவார்கள் என்பது திண்ணம்.

## கோவிலூர் ஆண்டவர் அருளிய
## சுபாநுபவத் திருவாக்கு (தொடர்ச்சி)

**(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)**

(இனி வரும் பகுதிகளில், எடுத்துக்காட்டாகக் கூறப்படும் செய்யுள் எண்கள், பக்கம், சொற்பொருள் ஆகியன, முன்னம் மேற்கோள் கூறப்பட்ட டாக்டர் சுப. அண்ணாமலை உரை (2010) நூலில் உள்ளவாறாகும். இந்த உரையின் ஒவ்வொரு பகுதியிலுமிருந்து, சில எடுத்துக்காட்டுகள் மூலமாக, மூல நூல் எத்தகையது எனக் காட்டி, அனைவரும் முழு நூலையும் படிக்க உந்துதலாக அமையவேண்டும் என்பதே இத்தொடரின் நோக்கம்.

**இறைவணக்கம் :**

இறைவணக்கத்தோடு நூலைத் தொடங்குதல் ஆன்மீக மரபு ஆகும். சைவ வழிபாட்டு நெறியில் கணபதி வணக்கம் தலையாயது. மேலும், பல தெய்வ வழிபாடுகளும் இதிலடங்கும்.

சுபாநுவத் திருவாக்கு நூலில், 1) கணபதி, 2) சுப்பிரமணியர், 3) சிவன் (கொற்றவாளீசர்), 4) அம்பாள் (திருநெல்லை), 5) ஐயுளி அம்மன், 6) கொப்புடை அம்மன், 7) திருமால், மற்றும் 8) பிரம்மம் (சொரூபம்) ஆகிய 98 இறை வணக்கச் செய்யுள்கள் உள. இவற்றின் அமைப்பு, கீழ்க்கண்டவாறு :

| இறைவணக்கம் | பக்கம் | செய்யுள் எண் | செய்யுள்கள் |
|---|---|---|---|
| 1) கணபதி | 05-06 | 01-03 | 3 |
| 2) சுப்பிரமணியர் | 07-07 | 04-04 | 1 |
| 3) சிவன் (கொற்றவாளீசர்) | 08-09 | 05-07 | 3 |
| 4) அம்பாள் (திருநெல்லை) | 10-32 | 08-57 | 50 |
| 5) ஐயுளி அம்மன் | 32-32 | 58-58 | 1 |
| 6) கொப்புடை அம்மன் | 33-36 | 59-67 | 9 |
| 7) திருமால் | 37-61 | 68-92 | 25 |
| 8) சொரூபம் | 62-65 | 93-98 | 6 |
| மொத்தம் | | | 98 |

இச்செய்யுள்களில், உபாசனா மூர்த்தியான திருநெல்லை அம்பாள் மிகுதியும் பாடப்பெற்றுள்ளமையும், சொரூப வணக்கமாக பிரம்மத்தைப் பாடியுள்ளமையும் தனிச் சிறப்பாகும். ஆகையால் இவ்விரண்டையும் தனியே, இனிவரும் இதழ்களில் காண்போம். ஒரு தெய்வத்திற்கு ஒரு பாடல் என்னும் வகைப்பாட்டில், ஆண்டவர் அருளிய இறைவணக்கச் செய்யுள்கள் வருமாறு :

1) **கணபதி வணக்கம் :**

**"சத்தே, என் சித்தத்து ஒளியாய் விளங்கும் சதாசுகமே**
**பத்தே பிறந்து பிறந்தேஇந் நாள்வரைப் பட்ட துன்பக்**

கொத்தே அகற்றும் குருவே, பிறக்கும் குணகுணிக்கு
வித்தே, கழனிச் சிதம்பரம் என்னும் விநாயகனே."

(-பாடல் 2, பக்கம் 5)

(சத்து = மாறாத உண்மைப் பொருள், சதாசுகம் = நித்யானந்தம், குணகுணி = முக்குணங்கள் மற்றும் அவற்றையுடையவன்)

குருவே ஈசுவரன் எனக் கருதும் தத்துவவாதி, முதலாவதாக குருவை வணங்கிவிடுவார். குரு வணக்கம் மட்டுமே, அவர் அனைத்துத் தெய்வங்களையும் வணங்கியதாகிறது. கணபதியை 'குருவே' எனப் போற்றும் ஆண்டவர், சைவ வழிபாடு மற்றும் அத்துவிதம் எனும் இரு நெறிகளையும் ஒருசேரக் காண்கிறார்.

கோவிலூருக்கு, கழனிவாசல் என முன்னர் பெயர் உண்டு. இங்குள்ள கணபதி, சிதம்பர விநாயகர் ஆவார்.

2) சுப்பிரமணியர் வணக்கம் :

"பையோடு அரவப் பணிபுனையும் பரமன் தனது
திருச்செவியில்,
கையார் நெல்லிக் கனியெனவே ககன அககனம் இலதான
மெய்யாம் பிரமம் இதுவென்று விளம்பற்கு உரிய
வேலோனே
பொய்யா மொழியர் இடத்துறைவாய் போற்றி போற்றி மிகப்
போற்றி."

(பாடல் 4, பக்கம் 7)

(பையாடு = படம் விரித்த, பணி = அணிகலன், ககன அககனம் = வெளி மற்றும் வெளியற்றது என ஒருசேரக் கூறப்படும் - பிரம்மம் எத்தகைத்து எனும் - தன்மை) தந்தைக்கு உபதேசித்த குருவானவர், தன் உள்ளத்திலும் உள்ளதால், தனக்கும் உபதேசிப்பார்.

3) கொற்றவாளீசர் (சிவன்) வணக்கம் :

"சுவர் உறையும் ஓவியங்கள் சுவரே என்றல்
சுபாவமதி போல்பரத்தில் தோன்றா நின்ற
பவமுதலாம் சங்கற்ப விகற்பம் எல்லாம்
பரவடிவாய்க் கண்டுபர வடிவ மான

**தவர்உறையும் கழனிநகர்க் கொற்ற நாதன்**
**தனதருளால் பேதமதி நாயி னேனுக்கு**
**இவன்அவன்நான் அதுஎன்னும் பேதம் இன்றி**
**எவ்வுருவும் சின்மயமா இருந்த வாறே."**
(பாடல் 7, பக்கம் 9)

(பவம் = பிறப்பு, இறப்புச் சுழல், சங்கற்பம் = எண்ணக்கரு, விகற்பம் = எண்ணம் மறைதல், தவர் = முனிவர்)

பல வகையான ஓவியங்கள் ஒரே சுவற்றில் வரையப்படலாம். பின்னர் இவை நீக்கப்பட்டு, வேறு ஓவியங்களும் அதே சுவற்றில் வரைபடலாம். ஓவியங்கள் நிரந்தரமல்ல. ஆனால் இவற்றிற்கு அடிப்படையான சுவர், ஒன்றாக உள்ளது. இது போலவே நமது எண்ணங்கள், கற்பனைகள், எண்ண மாறுபாடுகள் (சங்கற்ப விகற்பம்) மற்றும், இவன், அவன், நான், அது என வகை பிரிக்கப்பட்ட (வர்ண, ஆசிரம) வேறுபாடுகள் என்பன ஓவியங்களுக்கு ஒப்பானவை. இவை உண்மையல்ல. ஆனால் இவையனைத்திற்குமான அடிப்படை பிரம்மம் மட்டுமே. அது ஒன்றே உள்ளது, என ஸ்ரீபஞ்சதசி நூலில் (சித்திர தீபம் பகுதி) கூறும் தத்துவ நுட்பம் இங்கு இறை வழிபாடாக்கப்பட்டுள்ளது.

4) **ஐயுளி அம்மன் வணக்கம் :**
**"கண்ட பொருளல்ல, காணாப் பொருளல்ல கண்டபொருள்**
**மண்டும் இருளல்ல, மாயும் ஒளியல்ல, மன்னும்ஒளி**
**பண்டுஎன் பதும்அல்ல இன்றுஎன்பது அல்ல பராபரமாம்**
**அண்டம் அடங்க அடங்கப் பெருவெளி ஐயுளியே."**
(பாடல் 57, பக்கம் 32)

(மண்டும் = நிறையும், கண்டபொருள் = மெய்ப்பொருள், மன்னும் = என்றுமுள்ள)

மூலப் பரம்பொருளானது, காணக் கூடியது (திரிசியம்) அல்லது காண இயலாதது எனும் வரையறைகளுக்கு அப்பாற்பட்டது. அது, இருள் மற்றும் ஒளி போன்ற இரட்டை (துவிதம்) அல்ல. காலப் பிரிவுகள் (கண்டம்) இல்லாத அதனை, எப்போதுமுள்ளது (நித்யம், நிரந்தரம்)

எனலாம். அது வளிவெளியினையும் (அண்டம் / பிரபஞ்சம்) கடந்தது. அதுவே பரந்து விரிந்த (விபு) அனந்தம் ஆகும்.

பிரம்ம இலட்சணம் பற்றிக் கூறும் 1) இது அன்று என விலக்கும் (நேதி, நேதி எனும் எதிரேக வாதம்), மற்றும் 2) இதுதான் எனச் சுட்டுதல் (அன்வய வாதம்) எனும் இரண்டு வழிமுறைகளாலும் பிரம்மத்தைக் காட்டுகிறார்.

பஞ்சாக்கர நாயகி எனப் போற்றப்படும் ஐயுளி அம்மன், கோவிலூரின் காவல் தெய்வமாவார்.

5) **கொப்புடையம்மன் வணக்கம் :**

**"ஆலோன் இறந்தும் உமைபாகத்து அண்ணல் இறந்தும் கமலம்உறை**
**நால் ஆனனத்தோன் முடிந்துஇறந்தும் நாரதஆதியோர் இறந்தும்**
**காலஆதிகளும் ஒழிந்துஇறந்தும், ககனம்ஆதி அழிந்துஇறந்தும்**
**ஆலோகங்கள் இறந்துநின்றாய் அம்மே, கொப்பை உடையாளே."**

(பாடல் 6, பக்கம் 34)

(ஆலோன் = திருமால், நால் ஆனைத்தோன் = நான்முகன், ககனமாதி = ஆகாயம் முதலான ஐம்பூதங்கள், ஆலாகம் = ஒளி)

சிவன், திருமால், பிரமன், தேவர்கள், ஐம்பூதங்கள், காலம், ஒளி எனக் கூறப்படுவன பிரம்மத்தின் செயல் வடிவங்கள். இவை பிரளயத்தில் இறப்பன. ஆதலால் நித்யமல்ல. ஆனால் அப்போதும் கூட பிரம்மமான கொப்புடையாள் நிற்கும். (உலகியலில் பக்தி நெறி இன்றியமையாததாகும். ஆனால், ஆண்டவர், இங்கு தாம் வழிபடும் தெய்வங்களையே 'இறப்பன' எனக் கூறினும், இதில் முரண்பாடு ஏதுமில்லை. இங்கு கூறப்படுவது வியவகாரிகம் கடந்த ஞான நிலையில் (பரமார்த்திகம்) ஏற்புடைய தத்துவ நுட்பமாகும்.)

கொப்பு ஏந்திய இவ்வம்மன், காரைக்குடியின் முழுமுதல் தெய்வமாவார்.

6) **திருமால் வணக்கம் :**

**"நடந்து விடுங்காண் இருவினைகள்**
**நாராய ணாய நமஎன்னில்,**
**நடந்து விடுங்காண் பிறப்புஇறப்பு**
**நாராய ணாய நமஎன்னில்,**
**நடந்து விடுங்காண் பகைஉறவு**
**நாராய ணாய நமஎன்னில்**
**நடந்து விடுங்காண் அகங்காரப்பேய்**
**நாராய ணாய நமஎன்னில்."**

(பாடல் 68, பக்கம் 37)
(நடந்துவிடும் = சென்றுவிடும்)

நல்வினை-தீவினை, பிறப்பு-இறப்பு, பகை-உறவு போன்ற பலவற்றை நீக்கப்பட வேண்டிய இரட்டைகள் (துவிதம்) எனப்பட்டுள்ளது. துவைதம் நீங்கினால் அத்துவித ஒருமை சித்திக்கும். அகங்கார நீக்கமும் இதற்கு வழியாகும்.

ஆண்டவர் நமக்கு அளித்துள்ள செப மந்திரம் இது எனலாம். தெய்வ உயர்வு-தாழ்வு எனும் வேறுபாடு (சிவ-விஷ்ணு பேதம்) ஆண்டவருக்கு ஏற்புடையதல்ல என்பதை இச்செய்யுளால் அறியலாம்.

திருமால் பற்றியனவான 25 பாடல்களில், 'நீள் மாயையுடைய மாயனே' என முடியும் இருபத்தெண்சீர்க் கழில் நெடில் ஆசிரிய விருத்தப் பாக்கள் ஒன்பதும், மற்றும் தத்துவம் மட்டுமே பேசும் பலவும் உள்ளன. இவற்றை, இனி வரவுள்ள தத்துவப் படிக்கட்டு வரிசைப்பாட்டில் காண்போம்.

இவ்வாறு, இறைவணக்கத்தில் ஆண்டவர் போற்றிப் பாடும் கடவுளரெல்லாம் பிரம்மமாகவே காணப்படுதல் சிறப்பாகும். தெய்வ வழிபாட்டில் கூட, ஆண்டவர், தாம் எப்போதும் சிந்தித்த தத்துவத்தையே போற்றுகிறார் எனல் தெளிவு.

ஆண்டவர்தம் உபாசனா மூர்த்தியான திருநெல்லை அம்பாளின் வழிபாட்டுப் பாடல்களைப்பற்றி அடுத்த இதழில் காண்போம்.

*(தொடரும்...)*

## விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**